# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி – தை, மாசி, பங்குனி

2020 – ஜனவரி, மார்ச், ஏப்ரல்

ரிஷிகேஷில் உள்ள கோவிலூர் வேதாந்தமடத்தில் அமைந்திருக்கும் அருள்மிகு கற்பக விநாயகர் திருக்கோவிலில் 12.02.2020 அன்று நடைபெற்ற குடமுழுக்கு விழா நிகழ்வு.

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


விகாரி – தை, மாசி, பங்குனி

2020 – ஜனவரி, பிப்ரவரி, மார்ச் இதழ் – 91, 92, 93



சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


### பொருளடக்கம்




தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

சேவேந்து கொடியானைச் சேர்ந்தாள் தன்னைச்
செங்கமலப் போதொத்த செல்வி யாளை
சிறுவண்டு தென்பாடித் திரியப் பூக்கள்
செங்குமுதம் கமலமொடு சேர்ந்து நிற்கப்

பாவேந்து தமிழ்ப்புலவோர் பாடல் மாந்தும்
பச்சைமயில் பரமேட்டி பவள வாயாள்
பனிபடர்ந்த மலையிருப்பாள் குயில்கள் பாடிப்
பறந்துதிரி வன்னிவனம் பாது காக்கும்

பூவேந்து குழல்மாது புருவ வில்லாள்
புன்னகையாள் தவளநிறப் பொருப்பின் மேலாள்
புரிகுழலாள் வரிவிழியாள் பூத நாதன்
போற்றுதிரு மனையாட்டி கழனி வாசல்

காவேந்து வன்னிவனம் காக்கும் நெல்லை
கால்வணங்கி மாலகற்றி மங்கை முன்னர்க்
கைகுவித்தார் தம்வாழ்வு கனிய வைப்பாள்
கண்ணுதலான் தன்துணையைக் கருத லாமே.

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

மனிதர்களுடைய வாழ்க்கையிலே இயல்பாக அடைந்த நான்கு பருவங்கள் : 1. கல்விப் பருவம், 2. இல்லறப் பருவம், 3. தொண்டுப் பருவம், 4. துறவுப் பருவம்.

மேற்கூறிய பருவங்களிலேநாம் கடைசி இரண்டு பருவங்களைப் பற்றியும் விரிவாகவும், தெளிவாகவும் அறிந்து கொள்ள வேண்டும் என்பது நமது எண்ணம்.

தொண்டுப் பருவத்திலே இல்லற வாழ்க்கையிலிருந்து சற்றே விலகி கணவன் - மனைவி இருவரும் ஒத்த நினைப்போடு பொதுநல சேவை மனத்தோடு செயல்பட வேண்டும். தங்கள் மனத்தோடு செயல்பட வேண்டும், தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். நம்முடைய குழந்தைகள் வளர்ந்து, கற்றுத் தேர்ந்து இல்லறத்தில் ஈடுபட்டவர்களாக இருப்பார்கள். எனவே அவர்களுடைய கடமைகளை அவர்களே செய்வதற்கும், குல முறைப்படி வாழ்வதற்கும், சேவைகள் செய்வதற்கும் அவர்கள் பழகி இருப்பார்கள். எனவே அவர்களை அவர்களுடைய பொறுப்பிலே,தங்கள் இல்லறப் பணிகள், இல்லற சேவைகளில் இருந்து விலக்கிக் கொள்வது வானப்ரஸ்தர்களுக்கு இயலக் கூடிய காரியமாகவே இருக்கும். அதோடு மட்டுமன்றி அவர்களுடைய பொறுப்புக்களை அவர்களே ஏற்றுக் கொண்டு செய்ய விடாதவரை, அவர்களுக்குப் பொறுப்புணர்வு, கடமையுணர்வு வராது என்ற காரணத்தினால் வானப்ரஸ்தர்கள் ஒதுங்கி இருப்பதே அவர்களுக்கும் இளைஞர்களுக்கும் நன்மை பயக்கும். அப்பொழுதான் குடும்பக் கவலை, பணிச்சுமை இல்லாது தொண்டாற்றக்கூடிய மனநிலை ஏற்படும். ஆற்றப்படுகின்ற தொண்டுகளைக் கண்டு மகிழ்வும் ஏற்படும். எனவே தொண்டுக் காலம் சேவை மனப்பான்மையுடனும், விலகி நிற்கும் தன்மையுடனும் தொண்டுகளே முக்கியம் என்ற எண்ணத்துடன் வாழ்வது எளிதாகலாம். இதுவே அடுத்த பருவமான துறவு ஏற்பதற்கு நம்மையும் நம் மனத்தையும் தயார்ப்படுத்துகின்ற பருவமாகும்.

இப்படித் தொண்டுப் பருவத்திலே பக்குவப்பட்ட இணையர்கள் (தம்பதியர்) மேலும் மேலும் தொண்டாற்றவும் பிறர் நலனுக்காகவே வாழவும் கற்றுக் கொண்டவர்கள் ஆவார்கள். பருவ மாற்றங்கள் திடீர் என்று ஏற்படாமல் மெதுவாகவும் எளிதாகவும் ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்று இயல்பாகவும் அமையும்.

துறவறத்தினுடைய இலக்கணம் சொந்த பந்தங்களை உதறுவது மட்டுமன்று; எல்லோரையும் உறவாகக் கொண்டு ஆதரவு அளிப்பதுதான் முக்கியமான நோக்கம். ஏதாவது துயரங்கள் ஏற்படும் என்ற அறிகுறி தோன்றினால் அந்தத் துயரங்களில் இருந்து மற்றவர்களை, சம்பந்தப்பட்டவர்களைக் காப்பாற்றி அந்தத் துயரத்தின் பாதிப்பைத் தாமே ஏற்றுக் கொள்ள வேண்டும். துயரக் காலங்களில் நமக்கென்ன என்ற ஒட்டாத நினைப்பும் அவர்கள் விதி இடர்ப்படுகிறார்கள் என்ற வக்கிரமான எண்ணங்களும் துறவிக்குக் கண்டிப்பாக ஏற்படக் கூடாது.

சுவாமி விவேகானந்தர் தம்முடைய பரமகுருவான ராமகிருஷ்ண பரமஹம்சரைக் காட்டிலும் பரமஹம்சரின் குருபத்தினியான சாரதா தேவியிடம் அதிகமான பற்றும் மரியாதையும் கொண்டவராக இருந்தார் என்பது உலகறிந்த வரலாற்றுச் செய்தி. அவர் சாரதா அம்மையாரிடம் நான் துறவறம் மேற்கொள்ள விரும்புகிறேன். தாங்கள் அனுமதி தரவேண்டும் என்று வேண்டிய பொழுது அம்மையார் பதில் அளிக்காமல் அதோ அங்கிருக்கும் கத்தியை எடுத்துத் தா என்று கூறினார்களாம். விவேகானந்தர் அவ்வண்ணமே எடுத்துக் கொடுத்தாராம். உடனே அம்மையார் துறவைப் பற்றிப் பின்னர் யோசிக்கலாம் எனக் கூறி அனுப்பிவிட்டாராம். இவ்வாறு மேலும் இரண்டு மூன்று தடவை நடைபெற்றதாம். இவற்றிற்கு அடுத்த முறை அம்மையார் கத்தியை எடுத்துத் தரச் சொல்ல விவேகானாந்தர் எடுத்துக்கொடுத்தாராம். உடனே அம்மையார் புன் சிரிப்புடன் உனக்குத் துறவறம் ஏற்றுக் கொள்ளத் தகுதி வந்துவிட்டது போய் பரமஹம்சரைப் பார் என்று மகிழ்வோடு அனுப்பி வைத்தார்களாம்.

உடனே விவேகானந்தர் தாயே நான் முன்னர் நான்கு முறை கத்தியை எடுத்துக் கொடுத்த பிறகும் எனக்குப் பக்குவம் வரவில்லை என்று கருதிய தாங்கள் இப்பொழுது கத்தியை வாங்கிக் கொண்டதும் பக்குவம் வந்துவிட்டதாகக் கூறுகிறீர்களே இதன் சூட்சுமம் எனக்குப் புரியவில்லை தயவு செய்து தெளிவுபடுத்துங்கள் என்று வேண்டினாராம்.

அம்மையாரும் சிரித்துக் கொண்டே விவேகானந்தா முதல் தடவைகளிலே கூரான பக்கம் என்னை நோக்கியும் பாதுகாப்பான கைப்பிடிப் பக்கத்தை நீ பிடித்துக்கொண்டும் தந்தாய். இந்த முறை கூரான பகுதி உன் கையிலும் பாதுகாப்பான கைப்பிடி என் பக்கமும் இருக்குமாறு கொடுத்தாய். ஏற்படுகின்ற துயரங்களைத் தான் தாங்கிக் கொண்டு தன்னை நம்பி உள்ளவர்களைக் காப்பாற்றுவதே துறவியின் கடமை. அதனைப் புரிந்து கொண்டு அபாயம் தருகின்ற கூர்மைப் பகுதியை உன் கையில் பிடித்துக் கொண்டு கைப்பிடிப் பகுதியை என்னிடம் தந்தாய். இது உன்னுடைய மனத்திலே ஏற்பட்ட சிந்தனை மாற்றத்தையும் பக்குவத்தையும் எடுத்துக் காட்டுவதனால் உனக்குத் துறவு ஏற்கப் பக்குவம் வந்துவிட்டது என்று சொன்னேன் என்று கூறி ஆசிர்வதித்தாராம். சுவாமி விவேகானந்தரும் சர்வாங்கமும் தரையிற் பட விழுந்து அன்னையைப் பக்தியோடு வணங்கி விடைபெற்றுக் கொண்டார்கள்.

எனவே வானப்ரஷ்தர்கள் சுயநலத்தைக் குறைத்துக் கொண்டு தொண்டிலே மனம் ஒன்றியவர்களாக வாழ வேண்டும் என்பதும் துறவிகள் துயரங்களுக்கும், இடர்ப்பாடுகளுக்கும் அஞ்சாமல் தாம் வாழுகின்ற சமுதாயத்திற்குக் கேடயமாகத் தொண்டாற்றி அறிவு புகட்ட வேண்டும் என்பது துறவிகளின் தலையாய கடமை. அப்படி வானப்ரஸ்தர்களே துறவிகள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## திருமுறைப் பயன்

(பேரா. முனைவர் மு.வள்ளியம்மை)

வாழ்ந்து வரும் அடியார்க்கு மந்திரமும் தந்திரமும் மருந்துமாகிப் பிறவிப் பிணி தீர்க்க வழிகாட்டும் செந்தமிழ் தான் சுவையில் செழுந்தமிழாகும், எனச் சுந்தரர் அருளியுள்ளார். இறைவன் இருந்து நாளும் தமிழ் கேட்பதில் விருப்பமானவர். தமிழால் கேட்டால் தட்டாமல் தரும் தயாளன். ஆதலின் காசு நித்தம் நல்கினார். இத்தகையது அலகில் செந்தமிழ். இது காலங்கள் தோறும் வந்த அயல் வழக்குகளை வெல்லும். ஆதலின் எரியுருவாகி நின்ற இறைவனைப் பெருமந்திரமாகிய மூவர் பாடலாலும், அருளமுதப் பாடல்களாலும் போற்றுவோம். அதுவே மெய்மையான அருளியல், இதனை,

*திசையனைத்தின் பெருமையெலாம் தென்திசையே வென்றேற*
*மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனி வெல்ல*
*அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறைவெல்ல*
*இசை முழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலை பெருக*
*(பெ.புரா. 2.6.28.24)*

எனத் தெய்வச் சேக்கிழார் அருளியுள்ளார். வையத்துள் வாழ்வாங்கு வாழும் நெறிகட்கு உரிய மந்திரங்கள் திருமுறைகள் என்பது இதனால் விளங்கும்.

**கண்ட பெருமந்திரம் :**

எல்லாமாய் நிற்கும் சிவப்பரம் பொருளை இசைய வைப்பதையே நோக்கமாகக் கொண்டவைகள் திருமுறைகள். உயிர்க்கும் இறைவனுக்கும் இடையேயான தளைகளை நீக்கும் ஆற்றல் உடையவை அயலாதிக்க நெறிகளால் தமிழ்ச் செம்மை குறைந்த நிலையில் இவைதான் இனி மந்திரங்கள் எனக் கண்ட பெருமந்திரமே மூவர் பாடல்கள். மாமன்னன் இராசராசனைத் தமிழ் உணர வைத்தது இம்மந்திரம். மன்னன் முதற்றே மலர்தலை உலகம் என்ற நிலைப்படி மக்களையும் திருமுறையை உணரச் செய்தது இது.

*கொண்டு குலசேகரனாங் கோன்பால் வந்து*
*குஞ்சரத்தோன் அருள் செய்த கொள்கை எல்லா*
*மண்டு பெருங் காதலுடன் சொல்லியந்த*

*வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார்*
*கண்ட பெரு மந்திரமே மூவர் பாடல்*
*கை காணா மந்திரங் கண் ணுதலோன் கூற*
*எண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற் காக*
*இம்மொழியின் பெருமையை யானியம்பக் கேள்நீ*

*- திருமுறை கண்டபுராணம் - 1*

என்ற திருமுறை கண்ட புராணத்தால் இது விளங்கும். எனவே கண்ட பெருமந்திரம் என்பது மூவர் பாடலே என்பது தெளிவாகிறது.

**அரியதும் எளியதும்**

தமிழின் அகராதிச் சொற்கள் எல்லாம் திருமுறை ஆசிரியர்களின் உள்ளத்தில் உண்மையாகி, வாக்கினில் வாய்மையாகி, செயலால் மெய்ம்மையாகி நின்றன. அதனால் அவை மந்திரமாயின. ஓதுவார்க்கு அவை எக்காலத்திலும் உயர் நலம் அளித்தன என்பதைச் சான்றோர் வாக்குகளால் அறியலாம்.

திருமயிலையில் திருஞான சம்பந்தரின் தமிழ்வேத மந்திரம், எலும்பைப் பெண்ணாக்கியது. கொங்கு நாட்டு அவினாசியில் சுந்தரர் பெருமானின் மந்திர ஆணை முதலை உண்ட பாலகனை மீட்டது. திருப்பாதிரிப் புலியூரில் திருநாவுக்கரசரின் தமிழோடான இசைப்பாடல் கல்லை மிதக்கச் செய்தது. இத்தகைய சான்றுகளால் அரிது செய்வது அற்புதங்கள் எனத் தெரிகிறது. அந்த அரியவற்றை எளியதாகச் செய்தவை திருமுறைப் பாடல்கள் என்பதை,

*போதம் உண்ட பிள்ளை அன்பு பொருகண் மாது செய்ததோ*
*காதல் கொண்டு சொல்லின் மன்னர் கல்மிதப்ப உய்த்ததோ*
*வாய் திறந்து முதலைக்க மகனை நீ அழைத்ததோ*
*யாது நம்பி அரிது நன்று எனக்கு இயம்ப வேண்டுமே*

*- நால்வர் நான்மணிமாலை*

என்ற பாடல் தெளிவாகக் காட்டும்.

**ஆணையிடும் மந்திரங்கள்**

தமிழ் மந்திரங்களாகிய திருமுறைகள் அன்பால் கேட்க வைக்கும். அவை தமிழ் முதுபெண்ணை அம்மையே என்று சிவப்பரம் பொருளையே அழைக்க வைத்தது. தமிழ் பெற்றெடுத்த

காரைக்காலம்மையார் சிவனைப் பெற்றெடுத்த அம்மை என்னும் சிறப்பினைப் பெற்றாள். வாக்கால் சிறப்புப் பெற்றாள் அம்மை. காரணம், பிறந்து மொழி பயின்ற போது தமிழைப் பயின்றார். அவர் தமிழ் வாக்கு திருவாக்காய் மலர்ந்து அற்புதத் திருமந்திரம் ஆனது. தமிழ் மந்திரங்கள் வாயால் உரைத்தவை அல்ல; அவை வாய்மையால் உரைத்தவை. அவிநாசியிலே பிள்ளைதர உறுதி அளித்த சுந்தரர் பெருமான் தெளிந்த உள்ளத்தோடு தமிழ் மந்திரத்தால் ஆணையிடுகிறார்.

*காரைக்கால் முதலையைப் பிள்ளைதரச்*
*சொல்லு காலனையே – சுந்தரர்.*

என்பது சுந்தரர் பெருமானின் மந்திர மொழி. இம்மந்திரத்தின் மொழி தமிழ்மொழி; இம்மந்திரத்தை ஆணையிடும் ஆற்றலுடையார் சுந்தரர் பெருமான். இந்த மந்திர ஆணைய ஏற்று ஆணை வழங்குபவர் சிவப்பரம் பொருள். செயல்படுத்தும் ஊழியன் காலன். நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் முதலான ஐம்பூதங்கள் ஆணையால் பெற்ற அகத்தன்மைதான் முதலை. புறத்தன்மை பாலகன் உயிர். முதலைவாய்ப் பாலகன் அன்றைய நாள் உருவம் பெற்றான் என்று இம்மந்திர மொழிக்கு விளக்கம் தருவர் ஆன்றோர்.

**மந்திரம் ஓதும் நிலை**

அயல் ஆதிக்கச் சூழலின் இருண்மையில் தமிழ்ச் சமயங்களின் நிலை ஒளி இழந்தபோது அவற்றின் முந்தைய நிலையைத் திரும்பச் செய்தன தமிழ் வேதங்கள். அவற்றை அருளியவர்கள் திருமுறை ஆசிரியர்கள் என்பதை,

*சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் என் சுந்தரனும்*
*சிற்கோல வாதவூர்த் தேசிகனும் – முற்கோவி*
*வந்திலரேல் நீ றெங்கே? மாமறை நூல்தான் எங்கே?*
*எந்தை பிரான் ஐந்தெழுத்து எங்கே?*

*– திருவிளையாடற்புராணம்*

என்றார் திருவிளையாடற்புராணம் ஆசிரியர். இடைக் காடனார் தமிழைச் சிறிது இகழ்ந்தமையால் சொக்கநாதர் மதுரையை விட்டு அகன்றார் என்பது திருவிளையாடற்புராணச் செய்தி,

அத்தகு சிவப்பரம் பொருள் நம் மனத்தைவிட்டு அகலாது இருக்கவும், மனையை விட்டு அகலாது இருக்கவும் தமிழ்த் திருமுறை மந்திரங்களைச் சிறிதேனும் மனத்தில் இருந்து நீக்குதல் கூடாது. வேறு மந்திரங்கள் ஓதும் போது

*................................... விழிநீர் பெருக்கி*
*நெஞ்சம் நெக்குருகி நிற்பவர் காண்கிலோம்*

ஆனால் தமிழ் மந்திர ஆற்றலுடைய

*திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்*
*கருங்கல் மனமும் கரைந்துஉகக் கண்கள்*
*தொடு மணற் கேணியின் சுரந்து நீர்பாய*
*மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பு எய்தி*

*- சிவப் - நால்வர் நான்மணிமாலை*

நெஞ்சம் நெக்குருகுகிறோம் என்கிறார் சிவப்பிரகாசர்.

**தமிழ் ஓதி எரியோம்பிய திறம்**

எரியோம்புதல் என்பது கிரியை வழிபாடு. இதை மேற்கொண்டு ஒழுகியவர் ஞான சம்பந்தப் பெருமான். தமிழினைப் பயன்படுத்தி அவ்வழிபாட்டினைச் செய்தார் என்பதே அவரது தனிச் சிறப்பு. திருஞான சம்பந்தர் தமிழ் ஓதியே எரிதழல் ஓம்பினார் என்பதற்கு அவர்தம் தேவாரமே சான்றாகும். அதில் தழங்கெரி மூன்றோம்பு தொழில் தமிழ் ஞான சம்பந்தன் என்கிறார். தமிழைப் பயன்படுத்திச் செய்வதால் தன்னைத் தமிழ் ஞான சம்பந்தன் என்கிறார். மேலும் தன்வாய்ச் சொற்கள் எல்லாம் சிவபிரானுடைய தமிழ்ச் சொற்கள் என்கிறார்.

*காலனாம் எனதுரை தனதுரையாகக்*
*கனலெரி அங்கையில் ஏந்திய கடவுள்*

*- (திருஞா. திரு இலம்பையங் கோட்டூர் - 3)*

ஆதலால் அவை பெரும் பயன் தருவன. அவர் பாடிய பாடல்களைச் சேக்கிழார்.

*திருமுன்பு தாழ்ந்து எழுந்து நின்று*
*தமிழ் வேதம் பாடினார் தானம் பெற்றார்.*

*- பெ. 4.6:28:216*

என்றும்

*பன்னு தமிழ் மறையாம் பதிகம் பாடித்*
*திருக் கடைக் காப்புச் சாத்தி*
*அக்கரைப் பரமர்பால் அன்புறும் பிரிவுஊர்*
*மிக்க சொற்றமிழினால் வேதமும் பாடினார்*
*- பெ. 4.6:28:319*

என்றும் தமிழ் வேதமாகக் கொண்டு போற்றினார். சேக்கிழார் பெருமான் தமிழ் வேதமாகப் போற்றிய திருமுறைப் பாடல்களை நாம் வேதமாகப் போற்றிப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிது.

**அருச்சனை பாட்டாகும் :**

முப்போதும் திருமேனி தீண்டிச் சடங்குகள் செய்யும் குலத்திலே பிறந்து சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்தாட் கொண்டார் சிவப்பரம் பொருள். ஆட் கொண்டபின் என்னைப் பாடிப் புகழ்வாயாக! எனக் கட்டளையிட்டார். என்னபாட எனக்கேட்ட சுந்தரருக்குச் சிவப்பரம் பொருள் சொன்ன விடையைச் சேக்கிழார்.

*மற்றும்நீ வன்மைபேசி வன்தொண்டன் என்னும் நாமம்*
*பெற்றனை நமக்கும் அன்பின் பெருகிய சிறப்பின் மிக்க*
*அருச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக என்றார் தூமறை பாடும் வாயார்*
*- பெ.பு. தடுத்தாட் - 70*

என்று பாடுகிறார்.

மண்ணுலகத்தில் உள்ளவர்கள் பிறவிப் பெருங்கடலைக் கடந்து மும்மலக் குற்றங்களை நீக்க முயலலாம். எண்ணிய எண்ணியவாறு நிறைவேற வழிபாடு துணைபுரிகிறது. ஏத்தியும் பாடியும் வழிபடும் புண்ணியச் செயலால் செய்தவம் நிறைவேறும் என்பதைத் திருஞான சம்பந்தர் தேவாரம் பகரும். இறைவனால் விரும்பிக் கேட்கப்பட்ட தமிழ்த் திருமுறைகளே பெரும்பயன் நல்குவன என்பதில் ஐயமில்லை.

இத்திருமுறைகள் ஓடத்தைக் கரையேற்றும், முத்துச் சிவிகை யேற்றும், பொன்னும் பொருளும் தரும், நெடுங்கதவைத்திறக்கும், திறந்த கதவை மூடும், ஆண் பனையைப் பெண் பனையாக்கிப் பயன்தரும், பாலையைச் சோலையாக்கும், ஆற்றை எதிர்க்கும்,

வெப்புநோய் தவிர்க்கும்; எலும்புக்கும் உயிர் கொடுக்கும், யானையையும் அடக்கும்; நீற்றறையையும் குளிர்விக்கும், நஞ்சையும் கொஞ்ச வைக்கும், கல்லைத் தெப்பமாக்கிக் கடலை நீந்த வைக்கும்; உலகியல் வாழ்வில் பெறுவன பெறப் பேருதவி புரியும். திருவடிப் பேரின்பம் நல்கும். எனவே திருமுறைப் பாராயணம் என்பது உலகியல் வாழ்விற்குத் தேவையானவற்றைத் தந்து திருவடித் தாமரைகாட்டிப் பேரின்பம் நல்கும் என்பது மறுக்க முடியாத உண்மை.

## சசிவண்ண போதம்

### கோவிலூர்த் திருமட வேதாந்த மரபு

கோவிலூர்த் திருமடத்தில் 200 ஆண்டுகளுக்கு மேலாகது சங்கரர் போதித்து, அருளிய தத்துவ விளக்கங்களைக் குருபரம்பரையாகப் பாடம் நடத்தி வருகிறார்கள். வேதம், வேதாந்தம், இதிகாசங்கள் அனைத்தும் வடமொழியிலேயே எழுதப்பட்டு, பயிலப்பட்டுவந்தன. அதிலும் துறவிகளும், அந்தணர்களும் மட்டுமே கற்க வேண்டும் என்ற நியதி காலங்காலமாக அனுசிக்கப்பட்டு வந்தது. இதனை முழுமையாக மாற்றித் தமிழ் மொழியிலே அனைத்து வேதாந்தத் தத்துவக் கருத்துக்களும் எழுதப்பெற்று நூல்களாக உருவாக்கப்பட்டு ஆர்வமுள்ளவர்கள் யாவரும் ஜாதி மத இன பேதமின்றி கற்கலாம் என்று வழி முறைப்படுத்திய பெருமைக்குரியது கோவிலூர்த் திருமடம்.

இந்தப் புரட்சி அதாவது சிந்தனை மாற்றம் 15,16ஆவது நூற்றாண்டுகளிலே ஏற்பட்டு நூல்கள் உருவாக்கப்பட்டன. அதனைக் குருபரம்பரையாகக் கற்று இன்று வரை நெறிமுறை தவறாது பாடங்களை நடத்தி வருகிறது கோவிலூர்த் திருமடம். எனவே கோவிலூர்த் திருமடம் தமிழ் வேதாந்த மரபினுடைய தாய் வீடாக யாவராலும் அங்கீகரிக்கப்பட்டுப் புகழ்பெற்று உள்ளது. இன்றும் பல்வேறு அமைப்புகளின் மூலமாக சத்சங்களின் மூலமாகவும், சொற்பொழிவின் மூலமாகவும் பாடம் கேட்டல் (சிரவணம்) கற்றல் தொடர்ந்து கோவிலூர் மரபு வேதாந்தம் நன்கு நடைபெற்று ஆன்மீகப் பெருமக்களுக்கும் வேதாந்த ஆர்வலர்களுக்கும் (முமூட்சுக்களுக்கும்) பயன்பட்டு வருகின்றன. இந்த வேதாந்தத் தத்துவங்களை 16

பாடங்களாகப் பிரித்துப் பல்கலைக்கழக பாடமுறைபோல தொடர்ந்து நடத்தி வருகின்றது. கோவிலூர்த் திருமடமும் இன்றைய கிளை அமைப்புக்களும் நடத்திவருகின்றன.

கோவிலூர் மரபுவேதாந்த பாடத்திட்டபடி 16 நூல்கள் கற்பிக்கப்பட்டுவருகின்றன.

1. நாநாசீவவாதக்கட்டளை, 2. கீதாசாரத் தாலாட்டு, 3. சசிவன்ன போதம், 4. மகாராஜா துறவு, 5. வைராக்கியசதகம், 6. வைராக்கிய தீபம், 7. இலட்சணாவிருத்தி, 8. வேதாந்த சூடாமணி, 9. கைவல்லிய நவநீதம், 10. விவேக சூடாமணி, 11. அஞ்ஞவதைப் பரணி, 12. பஞ்சதசி, 13. ஈசுவரகீதை, 14. பிரம்மகீதை, 15. பகவத் கீதை, 16. ஞானவாசிட்டம் ஆகியவை ஆகும்.

மேற்கூறிய 16 நூல்களும் வடமொழி நூல்களில் இருந்து மொழிபெயர்க்கப்பட்டவையாக இல்லாமல், வடமொழியில் கூறியுள்ள அனைத்துத் தத்துவங்களையும் உள்வாங்கி மனதில் ஏற்றித் தமிழிலே அழகான எளிமையான தமிழ்ச் செய்யுள்களாக உருவாக்கப்பட்டவையாகும். முதல் நூல் மட்டும் சுலோக வடிவில் உள்ளது.

இந்த மேற்கூறிய 16 நூல்களும் முறையாகக் கடந்த 400க்கும் மேற்பட்ட ஆண்டுகளாக கற்பிக்கப்பட்டு வந்துள்ளன. வரலாற்றுக் குறிப்பின்படி சிருங்கேரி சாரதாபீடம் மகாசன்னிதானம் பாரதி தீர்த்த மகாசுவாமிகள் என்ற ஆச்சாரியாரிடம் முறையாகச் சிரவணம் செய்து வித்யாரண்ய குருபாரம்பரியமாகக் கற்று உணர்ந்த பிரம்மஞானிகள் தமிழிலே எல்லாக் கருத்துக்களும் கொண்ட வேதாந்த நூல்களைப் படைத்தார்கள். இப்படிக் காலங்காலமாகக் குருபரம்பரையிலே கற்று வந்த ஞானஆச்சாரியார்கள் வழியிலே சிக்கலை அடுத்த (பொருள் வைத்தசேரி) புறவாச்சேரி என்று பொதுமக்களால் அழைக்கப்படுகின்ற கிராமத்தில் பிரம்ம ஞானியான ஆச்சாரியார் உகந்தலிங்க சுவாமிகள் வாழ்ந்து வந்தார். அவர்கள் தன்னை நாடி வருகின்ற முமூட்சுக்களுக்கு வேதாந்த போதனை செய்து வந்தார்கள். பிரம்மஞானி ஸ்ரீமத் உகந்தலிங்க சுவாமிகள் நெசவுத் தொழிலாளர். நெசவுத் தொழிலின் மூலமாக வரும் வருமானத்தை மூன்று கூறுகளாகப் பிரித்து ஒரு கூறு

குடும்பச் செலவிற்கும், ஒரு கூறைச் சேமிப்பிற்கும், ஒரு கூறு வேதாந்த சிஷ்யர்களுக்கும் செலவு செய்து வந்த திருமகனார் ஆவார்.

நாகப்பட்டினத்திலும், சிக்கலிலும் வட்டித் தொழில் செய்து வந்த காரைக்குடி கோவிலூர் வீட்டைச் சார்ந்த மெய்யப்பச் செட்டியார் என்பவர் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுடைய திருமகனாக முத்துராமலிங்கம் என்று அழைக்கப்பட்ட குழந்தை அவதரித்தார். தக்க பருவம் வந்தகாலத்தில் உகந்தலிங்க சுவாமிகளின் பெருமையைக் கேட்டு அறிந்து அவரிடம் வேதாந்தம் கற்கத் தொடங்கி முழுமையாகக் கற்றார்கள். அப்படிக் கற்று வருகின்ற காலங்களிலே குரு பத்தினி ஆகிய பெருமாட்டி முத்துராமலிங்கம் உங்கள் ஊரிலே நிறைய மயில்களும் மயில் குஞ்சுகளும் உள்ளன எனக் கேள்விப்பட்டேன். நான் வளர்ப்பதற்காக இரண்டு மயில் குஞ்சுகளைப் பிடித்து வந்து தர வேண்டும் என்று ஆணையிட அவ்வாணையைத் தலைமேற் கொண்டு கோவிலூர் கிராமத்திற்கு முத்துராமலிங்கம் வந்து சேர்ந்தார்.

குருபத்தினியின் ஆணைக்கு இணங்கமயில் குஞ்சுகளைப் பிடிக்க வந்த முத்துராமலிங்கம் கோவிலூரில் திருநெல்லை உடனாய கொற்றவாளீஸ்வரர் திருக்கோவில் சிதிலமடைந்த ஓலைக் கூரையின் கீழே அம்மன் அமர்ந்திருப்பது கண்டு உள்ளம் வருந்தினார், நெகிழ்ந்தார். அத்திருக்கோவிலைச் செப்பனிட்டுக் கற்றளியாகக் கட்ட வேண்டும் என்று விரும்பினார். விருப்பம் வைராக்கியமாக மாறியது. எனினும் மற்ற கடமைகளாலே மனதில் கொண்ட அந்த வைராக்கியம் சில காலம் மறக்கப்பட்டுவிட்டது. அதனை நினைவுபடுத்தத் திருநெல்லை அம்மன் இளநங்கையாக உருக்கொண்டு முத்துராமலிங்கரின் அன்னையார் கோலம் இடுகின்ற நேரத்தில் பிரசனன்னமாகி என்ன ஆத்தா உன் மகன் எனக்கு நல்ல வீடுகட்டித் தருவதாகச் சொல்லி இருந்த கூரையையும் பிரித்துப் போட்டுவிட்டு போய்விட்டான். அவன் வந்தால் அவனுக்கு ஞாபகப்படுத்து என்று சொல்லி மறைந்தார். முத்துராமலிங்கரின் அன்னைக்கு ஏதும் புரியவில்லை. முத்துராமலிங்கர் திரும்பி வந்தவுடன் என்ன அப்பச்சி யாருக்கோ வீடுகட்டித் தருவதாகச் சொல்லி அவர்கள் இருந்த கூரையையும் பிரித்துப் போட்டுவிட்டாயாமே அந்தப் பெண் என்னிடம்

வந்து உனக்கு ஞாபகப்படுத்தச் சொல்லிவிட்டுப் போனாள். அப்படி இருந்தால் உடனடியாக அவர்களுக்கு வீடுகட்டித் தரஏற்பாடுசெய் என்றார்கள்.

திருநெல்லை அம்மனே பெண் உருக்கொண்டு தன் தாய்க்குத் தரிசனம் கொடுத்த தன்னுடைய தவறைச் சுட்டிக் காட்டியதையும் உணர்ந்து மனம் வருந்தினார். தாய் செய்த புண்ணியத்தை மனதாலே உணர்ந்து பெருமைப்பட்டார். அன்னை கூறிய செய்தி கேட்டுத் தன்னுடைய தவறையும் தாம் செய்த கால தாமதத்தையும் எண்ணி மிக வருந்தி உடனடியாகக் கோவிலூர் திருநெல்லை அம்மன் திருக்கோவில் திருப்பணியைத் தொடங்குவது என்று தீர்மானித்தார். அதன் வண்ணம் காரைக்குடி சுற்றுவட்டார நகரத்தார் மற்றும் ஊரார் எல்லோரிடமும் தன்னுடைய கோவில் திருப்பணி நோக்கத்தைக் கூறி நன்கொடை வசூலித்தார்.

1814ஆம் ஆண்டு திருநெல்லை உடனாய கொற்றவாளீஸ்வரர் திருக்கோவில் திருப்பணி இனிதே தொடங்கப்பட்டது. நன்கொடை சேரச் சேர அதற்குத் தகுந்தாற் போலக் கோவில் திருப்பணிகளும் நடந்தன.

இந்தக் காலக் கட்டத்தில் கோவில் திருப்பணியை மேற்பார்வையிடவும், வேதாந்த நூல்களைத் தொடர்ந்து படிக்கவும் ஓர் இடம் வேண்டும் என்ற எண்ணம் எழுந்ததன் காரணமாகக் கோவிலூர்த் திருமடம் சிறிய அளவிலே கட்டப்பெற்று 1818ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. கோவிலூர்த் திருமடத்தினுடைய முதல் குருமகா சன்னிதானமாக ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர் அமர்ந்து வேதாந்த தத்துவங்களைக் கற்பிக்கத் தொடங்கினார். மேற்சொன்ன 16 நூல்களிலே 14 நூல்கள் ஆரம்பத்தில் இருந்து போதிக்கப்பட்டதாகவும் இலட்சணாவிருத்தி, பஞ்சதசி இரண்டு நூல்களும் பிற்காலம் - சுமார் மூன்றாவது பட்டம் கருணாநிதி சுவாமிகள் காலத்திற்குப் பின் சேர்க்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

இங்ஙனம் கோவிலூர் கடந்த 200 ஆண்டுகளாகப் பல்கலைக்கழகம் போன்ற ஒழுங்கு முறையோடு வேதாந்தம் போதிக்கப்பட்டு வருகிறது. இத்திருமடத்தில் பல்லாயிரம் மாணவர்கள்

வேதாந்த சிரவணம் செய்து சிறந்த வேதாந்திகளாக வேதாந்த ஆச்சாரியர்களாக வளர்ந்திருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான மாணவர்கள் தங்களுக்குப் பிடித்த / ஏற்ற இடங்களில் மடங்களைத் தோற்றுவித்து வேதாந்த போதனை செய்து வந்திருக்கிறார்கள்.

கோவிலூர் மரபைச் சார்ந்த ஞானாச்சாரியர் ஸ்ரீமத் காசிகானந்த சுவாமிகள் 108 திருமடங்களைப் பட்டியலிட்டு இருக்கிறார். அதனைப் பெருமதிப்பிற்குரிய தமிழ் அறிஞர் சோமலெ அவர்கள் நம்முடைய 1978ஆம் ஆண்டு நடந்த கும்பாபிஷேக மலரிலே வெளியிட்டு இருக்கிறார்கள்.

இங்ஙனம் தமிழ் வேதாந்தம் பிறப்பதற்கும் வளர்வதற்கும் காரணமாக அமைந்த கோவிலூர்த் திருமடம் மக்களிடையே தமிழ் வேதாந்தத்தின் தாய் வீடாகக் கருதப்படுவதும், புகழப்படுவதும் இயல்பே ஆகும்.

## பாரதியின் பன்முகத் தன்மை

(பெ. குபேந்திரன், உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

**முன்னுரை :**

இருபதாம் நூற்றாண்டில் புத்துலகச் சமுதாயம் படைப்பதற்குரிய கைவாளாகக் கவிதைகளைப் படைத்ததோடு மட்டுமல்லாமல் எழுச்சி மிக்க தன் கவிதைகளால் புரட்சிக்கு வித்திட்டவர் மகாகவி பாரதியார் ஆவார். தன் கவிதைகளில் தமிழ்ப்பற்றை உருவாக்க ஆங்கிலேயர்கள் ஆங்கில மொழியைத் திணித்தபோது தன்னுடைய பாடல்களின் மூலம் மக்களிடையே விடுதலை உணர்வினைத் தட்டி எழுப்பினார். சாதி, சமய விடுதலை, மொழி விடுதலை, சமூக விடுதலை, பெண் விடுதலை, அடிமை விடுதலை என விடுதலை உணர்வை ஏற்படுத்தி அதனைத் தம்முடைய கவிதைகளில் கட்டமைத்துச் சமூகத்தில் தாய் மொழியான தமிழ் மொழியே பேச வேண்டும் எனச் சமூகப் பொறுப்புணர்வோடு எழுதியவர். இதனால் இவர் பல்வேறு சூழ்நிலைகளில் பல்விதத் தலைப்புகளான தமிழ் மொழிப்பற்று, நாட்டுப் பற்று, தேசிய ஒற்றுமை குறித்த செய்திகளை விளக்குவதாய் இக்கட்டுரை அமைகிறது.

**மொழிப்பற்று :**

பாரதியாரின் படைப்புகளில் அவர் கையாண்ட சொற்கள் மூலம் புதுப்பொலிவுடன் மொழி ஆய்விலும் மொழிப்பண்பாடு, மொழி வளர்ச்சி, மொழித் திட்டமிடுதல் போன்றவை பேசப்பட்டும், விளக்கியும் மக்களிடையே விளங்கி நிற்கின்றது. இதனையே பாரதியார், மொழி இல்லாவிட்டால், மனித சமுதாயமில்லை; மனித சமுதாயம் இல்லாவிட்டால் மொழி இல்லை என்றும் மனித இனத்தின் வாழ்க்கைக்கு மொழியே பிரதிபலிக்கும் காலக்கண்ணாடியாய்த் திகழ்ந்து நிற்கிறது என்கிறார் பாரதியார்,

"*முப்பது கோடி முகமுடையாள் உயிர்*
*மொய்ம்புற ஒன்றுடையாள் - இவள்*
*செப்பு மொழிபதினெட்டுடையாள், எனிற்*
*சிந்தனை ஒன்றுடையாள்*"

என்னும் அடிகளில் பாரதத்தில் வாழும் முப்பது கோடி மக்களும் பதினெட்டு மொழிகள் பேசிடினும் சிந்தனை ஒன்றாகட்டும் என்று நாடு, மொழி, இனம் என்ற பாகுபாடு இருந்தாலும் தமிழ் மொழி பேசி மக்கள் எல்லோரும் நலமுற்று வாழ வேண்டும் என்று பாடுகிறார்.

மொழித் திட்டமிடுதல் என்பது பல மொழிகளுள் நடைமுறையில் இருந்து வந்த எழுத்து முறைகளைச் சீர்படுத்துவதற்கும் புது எழுத்து முறைகளை உண்டாக்குவதற்கும் மற்றும் சொல் வளம், இலக்கண வளம், இலக்கிய வளம் ஆகியவற்றைக் பெருக்குவதற்குமே கையாளப்பட்டு வருகின்றது. அவ்வகையில் பாரதியார் சமஸ்கிருதம், வங்காளம், பிரெஞ்சு, ஆங்கிலம் போன்ற மொழிகளிலுள்ள கவிதைகள், வசனங்கள், வேதங்கள் முதலியவற்றைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். அவ்வாறு மொழிபெயர்க்கக் காரணம் பிறமொழிகளிலுள்ள நல்ல கருத்துக்கள் தமிழ் மொழியில் வர வேண்டும் என்ற அவரது பரந்த மனப்பான்மையே என்பதற்கு,

"*சென்றிடுவீர் எட்டுத் திக்கும் - கலைச்*
*செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்* "

என்னும் கவிதை சான்று காட்டி நிற்கின்றது. இந்தியச் சமுதாயத்தின் சூழலுக்கேற்பவும் தேவைக்கேற்பவும் மொழி உணர்வோடும் தேசிய உணர்வோடும் தமது படைப்புகளைச் செய்துள்ளாரே தவிர,

மொழியையும் நாட்டையும் தனித்தனியே இவர் பிரித்துப் பார்க்கவில்லை.

**தமிழ் மொழிப்பற்று :**

கம்பனுக்குப் பின் தமிழ் மக்களுக்கு மகாகவி பாரதியாரின் உணர்ச்சியாற்றல், கற்பனையாற்றல், அழகுக் கலையாற்றல், ரசனையாற்றல் முதலிய சிறந்த கவித்துவ அம்சங்களைக் கொண்டு கவிதை படைத்தவர் இவரே. தமிழ் மொழியைச் சிறப்பிக்கும் வகையில்,

"*யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல்*
*இனிதாவது எங்கும் காணோம்.*"

என்றும்,

"*சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்*
*தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர் !*"

"*பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்*
*தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்*
*இறவாத புகழுடைய புதுநூல்கள்*
*தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்*"

என்று பாரதியார் தமிழ் மொழியின் சிறப்பைக் கூறுவதோடு ஒவ்வொரு துறையிலும் தமிழ் மொழியின் பயன்பாடு சிறப்பாக அமையும் வகையில் பிறநாட்டு நல்ல அறிஞர்களில் சாத்திரங்களைத் தமிழ் மொழியில் மொழி பெயர்த்திட வேண்டும் என்று கூறுகின்றார். மேலும் எழுதுகின்ற கருத்துக்களும் பேசுகின்ற பேச்சுக்களும் எளிய மக்கள் மனதில் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய நடையாகவும் அமைய வேண்டும் என்று பாரதி கூறுகின்றார்.

தமிழ் பேசும் நாட்டினைப் புகழ்ந்து பாடும்போது கூட, தேசியக் கொள்கையே மேலோங்கி நிற்பதை அவர்தம் பாடலான,

"*செந்தமிழ் நாடெனும் போதினிலே – இன்பத்*
*தேன் வந்து பாயுது காதினிலே*"

என்றும்,

"*தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்*
*இங்கமரர் சிறப்புக் கண்டார்*"

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன. வளரும் தமிழை நுகரும் தமிழ் மக்கள் புதிய யுகத்தில் புதிய உலகத்தின் புனித மனிதராய் மலர்ந்து

புத்தின்பப் பெருவாழ்வு பெறுவர் என்று இமய முகட்டில் தூக்கி வைத்துத் தமிழுக்குப் பூசனை புரிகிறார் பாரதி.

*"வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே
வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே"*

என்று தமிழை வாழ்த்தி நம்பிக்கை ஊட்டுகிறான் பாரதி.

**நாட்டு விடுதலை உணர்வு :**

பாட்டிற்கு விடுதலை தந்த பாரதி தன் பாடல்களில் நாட்டிற்கு விடுதலை வேண்டும் எனப் போர் முரசு கொட்டினான். தாழ்ந்து கிடந்த இந்திய மக்களைத் தன் பாட்டுத் திறத்தால் தட்டி எழுப்பினான். சொல்லுக்கு இருக்கும் ஆற்றலை வெளிப்படுத்தினான். கோழைகளையும் வீரர்களாக்கும் வல்லமை இவனது பாடல்களுக்கு இருந்தது. அதனை நிரூபிக்கும் வகையில் பாஞ்சாலி சபதத்தில் அவன் செய்யும் புரட்சியும், புதுமையும் ஏராளமானவையாகும். வீடு, வாசல், நிலபுலன்கள், சொத்து, சுதத்திரங்கள் ஆகிய யாவற்றையும் இழந்து சூதாட்டத்தில் பணயம் வைத்துத் தோற்றுப் போகிறான் தருமன். நயவஞ்சகனான சகுனி சாதுரியமாக அவனது நாட்டையே பெற்றுக் கொள்கிறான் என்கிறது மகாபாரதம். குடியாட்சிக் கொள்கை எவ்வாறு உள்ளது என்பதை,

*"கோயில் பூசை செய்வோர் – சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போன் – வீட்டை
வைத்திழத்தல் போலும்
ஆயிரங்களான – நீதி
அவை உணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந்தான் : சீச்சி
சிறியர் செய்கை செய்தான்"*

எனும் கவிதை புலப்படுத்துகின்றது. நாட்டுணர்வு மண்ணின்மேல் பட்டு நாட்டு மக்களள் சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கத் தொடங்கினர்.

அதனால் நம் மக்கள் ஒன்று சேர்ந்து ஆங்கிலேயரிடமிருந்து எதிர்த்து வருவதால் நிச்சயம் நமக்கு வெற்றி கிடைக்கும் என்பதனை,

"*ஜயமுண்டு பயமில்லை மனமே! - இந்த*
*ஜன்மத்திலே விடுதலையுண்டு நிலையுண்டு (ஜய)*
*பயனுண்டு பக்தியினாலே - நெஞ்சிற்*
*பதிவுற்ற குலசக்தி சரணுண்டு பகையில்லை (ஜய)* "

என்னும் கவிதை அடிகள் கொண்டு விளக்குகிறார்.

**தேசிய ஒற்றுமை :**

தேசிய உணர்வு என்பது நாட்டுப்பற்றாகும். இந்திய நாட்டில் ஒவ்வொரு குடிமகனுக்கும் நாட்டுப்பற்று இருத்தல் அவசியமாகும். தேசிய ஒற்றுமையின்மையே பிற நாட்டினர்க்கு வாய்ப்பாக அமைந்து விட்டது. இதனால் நாம் ஆங்கிலேயர்களிடம் அடிமைப்பட்டுக் கிடந்தோம். அவ்வடிமையிலிருந்து மீண்டு வர ஒவ்வொரு குடிமகனுக்கும் அடிப்படை உணர்வாக தேசிய ஒற்றுமை உணர்வு இருந்ததால் அந்நியர் ஆட்சியில் அதன்வழி நிகழ்ந்த அடக்குமுறைகளும் இந்தியர்களிடையே ஒற்றுமை உணர்வு ஏற்பட வழிவகுத்து நின்றதனை,

"*ஆவியி னுள்ளும் அறிவி னிடையிலும்*
*அன்பை வளர்த்திடுவோம் விண்ணின்*
*ஆசை வளர்த்திடுவோம் - களி*
*ஆவல் வளர்த்திடுவோம் - ஒரு*
*தேவி மகனைத் திறமைக் கடவுளைச்*
*செங்கதிர் வானவனை விண்ணோர் தமைத்*
*தேனுக் கழைப்பவனைப் - பெருந்திரள்*
*சேர்ந்து பணிந்திடுவோம் - வாரீர்* "

என்று தம் கவிதைகளின் மூலம் நாட்டு மக்களிடையே ஒற்றுமை உணர்வினை வளர்ப்பதற்குச் சமய நிலையில் ஒன்று கூடுவோம் வாரீர் ! என்று அழைக்கிறார் பாரதியார்.

**உழைப்பே தெய்வம் :**

சோம்பலில்லா உலகம் காண எண்ணிய பாரதி தன் கவிதையில் உழைப்பையும் போற்றுகின்றார். உழைப்பினால் மட்டுமே உயர முடியும் என்பதற்கு,

*" நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்குழைத்தல்*
*இமைப்பொழுதும் சோராதிருத்தல் - உமைக்கினிய*
*மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பாள்*
*சிந்தையே யிம்மூன்றும் செய் "*

எனும் பாடல் வழி தெளிவுறுத்துகிறார். சமுதாயத்தில் உழைப்பவரே தெய்வம் என்றும் அவ்வகையில் எமக்குத் தொழில் கவிதை எழுதுவதே எனக் கூறி மேன்மைப்படுத்திக் கூறியுள்ளார்.

செய்யும் தொழிலே தெய்வம் என்னும் சொல்லிற்கு ஏற்ப உழைப்பவரையும் தெய்வமாக்கி எண்ணையும், எழுத்தையும் தன் கவிதையின் வழி வெளிப்படுத்திக் காட்டியுள்ளார். இதனை,

*" ஆயிரம் தெய்வம் உண்டென்று தேடி*
*அலையும் அறிவிலிகாள் - பல்லாயிரம் வேதம்*
*அறிவொன்றே தெய்வமுண்டா மெனல் கேளீரோ "*

எனும் அடிகளில் அறிவையே தெய்வம் என்று பாடியுள்ளார்.

முடிவுரை :

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவியாகப் பாரதி திகழ்வதற்குக் காரணம் அவர் மக்கள் கவியாகத் திகழ்ந்தமைதான். மக்களுக்கான கவிதையை, மக்களுக்கான தேவைகளுக்காக, மக்களுக்காகப் பாடினார். இதனால் அவரால் மக்கள் பிரச்சனைகளை வெகுவாக எடுத்தியம்பிட முடிந்தது. அவ்வகையில் தனது கவிதையின் மூலம் தமிழ் மொழியின் நிலை, நாட்டுப்பற்றின் நிலை, தேசிய ஒற்றுமைகள் பிற மொழியைத் தமிழோடு இணைத்துப் பார்ப்பதன் மூலம் அச்சமூகத்தில் உள்ள சமயத்தின் தாக்கம் எந்த அளவுக்கு ஆணிவேராகப் பதிந்து மக்களைப் பிரித்தாள்கிறது என்பதை உணர்ந்த பாரதி தன் கவிதைகளால் மக்களை இணைக்கும் முயற்சியை மேற்கொண்டு வெற்றி கண்டவர் என்பதில் மிகையில்லை.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### தெரிந்து தெளிதல்

(அமைச்சர் முதலானோரைத் தெரிந்து தெளிந்து கொள்ளுதல்)

**1. அறம்பொருள் இன்பம் உயிர்அச்சம் நான்கின்**
**திறம்தெரிந்து தேறப் படும்.**

அறம் பொருள் இன்பம் - அறமும் பொருளும் இன்பமும் ; உயிர் அச்சம் - உயிருக்கு வரும் அச்சமும் ; நான்கின் திறம் தெரிந்து - இவை நான்கின் திறத்தினையும் ஆராய்ந்து ; தேறப்படும் - தெளிந்து கொள்ளப்படும்.

அறமும் பொருளும் இன்பமும் உயிருக்கு வரும் அச்சமும் என்ற நான்கின் திறத்தையும் ஆராய்ந்து தெளிந்து துணையாவோரைக் கொள்ள வேண்டும்.

**2. குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்**
**நாணுடையான் கட்டே தெளிவு.**

குடிப்பிறந்து - நல்ல குடியிற் பிறந்து ; குற்றத்தின் நீங்கி - எந்தக் குற்றமும் இல்லாதிருந்து ; வடுப்பரியும் - வடு வருமோ என்று அஞ்சும் ; நாணுடையான் - அவற்றுக்காக நாணப்படுகிறவன் ; கட்டே தெளிவு - இடத்தே தெளிவு வேண்டும்.

நல்ல குடியில் பிறந்து எந்தக் குற்றமும் இல்லாதிருந்து வடுவருமோ என்று அஞ்சி நாணப்படுகிறவனிடத்தே தெளிவு வேண்டும்.

*குடிப்பிறந்து - ஏழாம் வேற்றுமைத் தொகை.*

**3. அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்**
**இன்மை அரிதே வெளிறு.**

அரியகற்று - அரிய நூல்களைக் கற்று ; ஆசுஅற்றார் கண்ணும் - குற்றமற்றவரிடத்திலும் ; தெரியுங்கால் - ஆராயும் போது ; வெளிறு இன்மை அரிதே - அறியாமை இல்லாமை அரிதாகும்.

அரிய நூல்களைக் கற்றுக் குற்றமற்றவராக இருப்பினும் ஆராயும் போது அவரிடத்திலும் அறியாமை இல்லாமை அரிதாகும்.

*கண்ணும் - சிறப்பு உம்மை*

**4. குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
**மிகைநாடி மிக்க கொளல்**

குணம் நாடி – ஒருவருடைய குணங்களை ஆராய்ந்து ; குற்றமும் நாடி – குற்றங்களையும் ஆராய்ந்து ; அவற்றுள் மிகை நாடி – குணம் குற்றங்களுள் மிகுதியானவற்றை ஆராய்ந்து ; மிக்க கொளல் – மிகுதியின் அளவில் அறிந்து கொள்ள வேண்டும்.

ஒருவருடைய குணங்களையும் குற்றங்களையும் ஆராய்ந்து அவற்றுள் மிகுதியானவற்றை ஆராய்ந்து மிகுதியின் அளவில் அவரை அறிந்து கொள்ள வேண்டும்.

*நாடி – வினை எச்சம் ; குற்றமும் – உம் எச்ச உம்மை*

**5. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்**
**கருமமே கட்டடளைக் கல்.**

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் – ஒருவரின் பெருமைக்கும் மற்ற சிறுமைக்கும் ; தத்தம் கருமமே – அவரவர் செய்யும் செயலே ; கட்டளைக்கல் – உரைகல்லாகும்.

ஒருவரின் பெருமைக்கும் மற்ற சிறுமைக்கும் அவரவர் செய்யும் செயலே உரைகல்லாகும்.

*கருமமே – ஏ காரம் தேற்றேகாரம்*

**6. அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றுஅவர்**
**பற்று இலர் நாணார் பழி.**

அற்றாரை – சுற்றம் இல்லாதாரை ; தேறுதல் ஓம்புக – தெளிந்து கொள்வதை விட்டு விடுக ; மற்று அவர் பற்றுஇலர் – அவர்கள் யாருடனும் பற்றில்லாதவர்கள் ; நாணார்பழி – பழிக்கும் அஞ்சமாட்டார்கள்.

சுற்றங்கள் இல்லாதவர்கள் யாருடனும் பற்று இல்லாதவர்களாகவும் பழிக்கு அஞ்சாதவர்களாகவும் இருப்பதால் அவர்களைத் தெளிந்து கொள்வதை விட்டுவிடுக.

*ஓம்புக – வியங்கோள் வினைமுற்று ; நாணார் – எதிர்மறை வினைமுற்று.*

**7. காதன்மை கந்தா அறிவுஅறியார்த் தேறுதல்**
**பேதைமை எல்லாம் தரும்.**

காதன்மை கந்தா - அன்புடைமையைப் பற்றுக் கோடாக ; அறிவு அறியார்த் தேறுதல் - அறிய வேண்டியதை அறியாதாரைத் தெளிந்து கொள்ளுதல் ; பேதைமை எல்லாம் தரும் - அறியாமை அனைத்தையும் தரும்.

அன்பின் பற்றால் ஒன்றும் அறியாதாரைத் தெளிந்து கொள்ளுதல் அறியாமை அனைத்தையும் தரும்.

**8. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**
**தீரா இடும்பை தரும்.**

தேரான் பிறனைத் தெளிந்தான் - பிறரை ஆராயாது தெளிந்தவனுக்கு; வழிமுறை தீரா இடும்பை தரும் - தன் வழிமுறைக்கும் நீங்காத துன்பத்தைத் தரும்.

பிறரை ஆராயாமல் தெளிந்தவனுக்குத் தன் வழிமுறைக்கும் நீங்காத துன்பத்தைத் தரும்.

*தீரா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் ; தேரான் - முற்றெச்சம்*

**9. தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்**
**தேறுக தேறும் பொருள்**

தேறற்க யாரையும் தேராது - எவரையும் ஆராயாமல் தெளிதல் கூடாது; தேர்ந்தபின் - ஆராய்ந்தபின் ; தேறுக தேறும் பொருள் - தெளிந்த பொருள்களைத் தெளிதல் வேண்டும்

எவரையும் ஆராயாமல் தெளிதல் கூடாது ; ஆராய்ந்தபின் தெளிந்த பொருள்களைத் தெளிதல் வேண்டும்.

*தேறற்க, தேறுக - வியங்கோள் வினைமுற்று ; யாரையும் - முற்றும்மை*

**10. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்**
**தீரா இடும்பை தரும்.**

தேரான் தெளிவும் - ஆராயாமல் தெளிவதும் ; தெளிந்தான்கண் ஐயுறவும் - தெளிந்தவனிடத்தில் ஐயமும் ; தீரா இடும்பை தரும் - நீங்காத துன்பத்தைத் தரும்

ஆராயாமல் தெளிவதும் தெளிந்தவனிடத்தில் ஐயமும் நீங்காத துன்பத்தைத் தரும்.

## தெரிந்து வினையாடல்

(செய்யவல்ல வினைகளை ஆளுதல்)

**1. நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த**
**தன்மையான் ஆளப் படும்.**

நன்மையும் தீமையும் நாடி – நல்லனவற்றையும் தீயனவற்றையும் ஆராய்ந்து ; நலம் புரிந்த தன்மையான் – நன்மை விளைக்கும் தன்மையினை உடையவன் ; ஆளப்படும் – சிறந்த வினைகளில் ஆளப்படுவான்.

நல்லனவற்றையும் தீயனவற்றையும் ஆராய்ந்து நன்மை விளைக்கும் தன்மையினை உடையவன் சிறந்த வினைகளில் ஆளப்படுவான்.

**2. வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை**
**ஆராய்வான் செய்க வினை.**

வாரி – வருவாய் ; பெருக்கி – விரிவு செய்து ; வளம்படுத்து – பொருட் செல்வத்தை வளர்த்து ; உற்றவை – இடையில் ஏற்படும் நிகழ்வுகளை ; ஆராய்வான் – ஆராய்ந்து ; செய்க வினை – வினையைச் செய்ய வேண்டும்.

வருவாயை விரிவு செய்து பொருட்செல்வத்தை வளர்த்து இதனிடையே ஏற்படும் நிகழ்வுகளை ஆராய்ந்து வினையைச் செய்ய வேண்டும்.

*ஆராய்வான் – வான் ஈற்று வினை எச்சம் ; செய்க – வியங்கோள் வினைமுற்று.*

**3. அன்பு அறிவு தேற்றம் அவாஇன்மை இந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு.**

அன்பு – அன்பு ; அறிவு – ஆவன அறியும் அறிவு ; தேற்றம் – வினையில் தெளிவு ; அவா இன்மை – ஆசை இல்லாமை ; இந்நான்கும் நன்குடையான் கட்டே – இந்நான்கு குணங்களையும் நன்குடையானிடத்திலே ; தெளிவு – தெளிதல் வேண்டும்.

அன்பும் ஆவன அறியும் அறிவும் வினையில் தெளிவும் வரும் பொருளில் ஆசை இல்லாமையும் என்ற நான்கு குணங்களையும் உடையவனிடத்திலே தான் வினைசெய்யத் தெளிதல் வேண்டும்.

**4. எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறாகும் மாந்தர் பலர்.**

எனைவகையால் - எந்த வகையால் ; தேறியக் கண்ணும் - தெளிந்து கொண்டாலும் ; வினை வகையான் - வினைகளின் இயல்பால்; வேறாகும் மாந்தர் பலர் - வேறுபடும் மாந்தர் பலராவர்.

எந்த வகையால் தெளிந்து கொண்டாலும் அவரவர் ஆற்றும் வினைகளின் இயல்பால் மாந்தர்கள் வேறுபடுவர்.

*தேறியக் கண்ணும் - உம்மை ஒழியிசை*

**5. அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்**
**சிறந்தான்என்று ஏவற்பாற் றன்று.**

அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் - வினை செய்யும் வழிகளை அறிந்து பொறுத்துச் செய்கின்றவனை அல்லாமல் ; வினைதான் சிறந்தான் என்று - வினை செய்ய வல்லவன் என்று கருதி ; ஏவற்பாற் றன்று - வினை செய்ய ஏவுதல் கூடாது.

வினைசெய்யும் வழிகளை அறிந்து பொறுத்துச் செய்கின்றவனை அல்லாமல் வினை செய்ய வல்லவன் என்று கருதிப் பிறனை ஏவுதல் கூடாது.

**6. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு**
**எய்த உணர்ந்து செயல்**

செய்வானை நாடி - வினை செய்வானை ஆராய்ந்து ; வினை நாடி - செய்யவுள்ள வினையையும் ஆராய்ந்து ; காலத்தோடு எய்த - செய்வதற்குரிய காலத்தோடு பொருந்த ; உணர்ந்து செயல் - உணர்ந்து செய்ய வேண்டும்.

வினை செய்வானை ஆராய்ந்து செய்யவுள்ள வினையையும் ஆராய்ந்து செய்வதற்குரிய காலத்தோடு பொருந்த உணர்ந்து செய்தல் வேண்டும்.

**7. இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து
அதனை அவன்கண் விடல்.**

இதனை - இந்தச் செயலை ; இதனால் - இந்தக் கருவியால் ; இவன்முடிக்கும் - இவன் செய்யவல்லவன் ; என்று ஆய்ந்து - என்று ஆராய்ந்து; அதனை - அந்தச் செயலை ; அவன்கண் விடல் - அவனிடத்தில் ஒப்படைக்க வேண்டும்.

இந்தச் செயலை இந்தக் கருவியால் இவன் செய்ய வல்லவன் என்று ஆராய்ந்த பிறகு அந்தச் செயலை அவனிடத்தில் ஒப்படைக்க வேண்டும்.

*இதனை, இதனால், அதனை, அவன்கண் - வேற்றுமை உருபுகள் அடுக்கி வந்தன.*

**8. வினைக்குஉரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரியன் ஆகச் செயல்.**

வினைக்குஉரிமை நாடிய பின்றை - வினை செய்தற்கு உரியவனாக ஆராய்ந்த பிறகு ; அவனை அதற்குரியன் ஆகச் செயல் - அந்தச் செயலுக்குரியவனாக அவனை ஆக்கி விடுதல் வேண்டும்.

ஒருவனை வினை செய்தற்கு உரியவனாக ஆராய்ந்த பிறகு அவனை அதற்குரியவனாக ஆக்கி விடுதல் வேண்டும்.

**9. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு.**

வினைக்கண் வினையுடையான் கேண்மை - தன்செயலில் முறையாகக் செயலாற்றும் தன்மையுடையவனின் உறவினை ; வேறாக நினைப்பானை - மாறுபாடாகக் கருதுவானை ; நீங்கும் திரு - செல்வம் நீங்கும்.

தன் செயலில் முறையாகச் செயலாற்றும் தன்மையுடையவனின் உறவினை மன்னன் மாறுபாடாகக் கருதினால் அவனைவிட்டுச் செல்வம் நீங்கும்.

**10. நாடொறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமைக் கோடாது உலகு.**

நாடொறும் நாடுக மன்னன் - மன்னன் நாள்தோறும் ஆராய வேண்டும்; வினைசெய்வான் கோடாமை - வினை செய்வானது கோடுதல் இல்லாத தன்மையால் ; கோடாது உலகு - உலகம் கோடாது.

வினை செய்வான் தவறிழைக்கவில்லை என்றால் உலகமும் தவறாகாது. எனவே மன்னன் நாள்தோறும் வினை செய்வானின் செயலை ஆராய வேண்டும்.

உலகு - இடவாகு பெயர்.

*(தொடரும்...)*

## யார் கொலோ சதுரர்?

**(திருஅருட்பா - நான்காம் திருமுறையின் அருட்பிரகாசமாலை பற்றிய ஓர் அழகியல் திறனாய்வு)**

**பேராசிரியர். மு. பழனி இராகுலதாசன்**

'அருட்பெருஞ்ஜோதி, தனிப்பெருங்கருணை' என்ற ஒரு புதிய ஆன்மிக அருள் முழக்கத்தோடு வெளிவந்தவர் இராமலிங்க வள்ளலார் ஆவார். (1823 - 1874) "கடவுள் ஒருவரே ; அவரை ஜோதி வடிவில் வழிபட வேண்டும் ; சிறுதெய்வ வழிபாடுகள் வேண்டாம்; உயிர்ப்பலி கூடாது ; புலால் உண்ணல் ஆகாது ; சமுதாயத்தில் சாதிப் பிரிவுகள் வேண்டாம் ; எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணி ஒழுகும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை மேற்கொள்ளுதல் வேண்டும் " என்று வள்ளலார் தம்முடைய கொள்கைக்கு விளக்கம் தந்தார். இராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்த பாடல்கள் அனைத்தும் "திருஅருட்பா ஆறு திருமுறைகள்" என்ற தலைப்பில் தொகுக்கப்பட்டுள்ளன. தமிழ் ஆன்மிகப் பாதையில் இராமலிங்க சுவாமிகள் மாணிக்கவாசகரின் அடுத்த அவதாரம் என்றே போற்றப்படுகிறார். "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ !" என்பது இராமலிங்கர் அருளிய வாக்கு. தமிழ் - இந்தியப் பக்தி வரலாற்றில் வள்ளலாரின் ஆறு திருமுறைகளும் ஒரு புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சின. ஆறு திருமுறைகளிலும் பயின்று வரும் பாடல்கள் எளிமை, இனிமை, புதுமை ஆகிய மூன்று கூறுகளும் நிரம்பி வழியும் திறம் பெற்றவை. "தமிழ்நாட்டில் நிலவிய இருள் கடிய எழுந்த ஞாயிறு நம் இராமலிங்க சுவாமிகள்" என்று தமிழ்த்தென்றல் திரு.வி.க. சுட்டிக்காட்டுவார்.

அத்தகைய ஞாயிற்றின் கவிதைகள் வழியே பக்தி நெறி ஆராயப்பட்டுள்ளது ; சமரச சன்மார்க்க நெறி ஆராயப்பட்டுள்ளது; அவர் அறிவித்த "மரணம் இலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம்" என்ற அறிவிப்பும் அழைப்பும் ஆராயப்பட்டன ; ஆனால் இராமலிங்கரின் கவித்துவ நுட்பங்கள் தனியே விரிவான அளவுக்கு ஆராயப்படவில்லை; மேடைகளிலும், நூல் வடிவத்திலும், கட்டுரை ஆக்கங்களிலும் அறிஞர் பெருமக்கள் ஆங்காங்கே ஓரளவுக்கே எடுத்துக்காட்டியுள்ளனர். அருட்பா ஆறு திருமுறைகளும் என்ன சொல்கின்றன? என்ற ஆராய்ச்சியே மிகுதி ; ஆனால் எப்படிச் சொல்கின்றன ? என்ற ஆராய்ச்சி ஒப்பீட்டளவில் குறைவே ஆகும். என்ன சொல்கின்றன ? என்பது உள்ளடக்க ஆய்வு; எப்படிச் சொல்கின்றன? என்பது உருவம் பற்றிய அழகியல் ஆய்வு. "யார் கொலோ சதுரர்?" என்ற தலைப்பிலான இந்தச் சிறிய கட்டுரை இராமலிங்க சுவாமிகள் தமது கவிதை ஆக்கத்தில் 'எப்படிச் சொல்லியிருக்கிறார்?' என்று எடுத்துக்காட்டும் ஒரு சிறிய முயற்சியே ஆகும்.

இராமலிங்க சுவாமிகள் தமது கவிதை ஆக்கப் பெருவெளியில், எவ்வாறெல்லாம் உவமைகள், உருவகங்கள் உருக்காட்சி விளக்கங்கள் அமைத்துப் பாடியிருக்கிறார் என்று கவனிப்பது ஒரு வித்தியாசமான திறனாய்வு ஆகும். இந்த வகையில் சன்மார்க்க சீலர் பேராசிரியர் சுப. அண்ணாமலை அவர்கள் எழுதிய "உருவும் உணர்வும்" என்ற நூல் குறிப்பிடத்தக்க நூலாகும். நமது அருட்பா ஆறு திருமுறைகளிலும் உருவம் எவ்வாறெல்லாம் அமைந்து செல்கிறது என்று ஆராய்வது ஒரு பெரிய ஆராய்ச்சியாகவே அமையும்.

இராமலிங்க சுவாமிகள் என்ன சொல்லியிருக்கிறார் ? என்று ஆராய்வது பக்தி அடிப்படையிலான ஆராய்ச்சி; எப்படிச் சொல்லியிருக்கிறார் என்று ஆராய்வது உத்தி அடிப்படையிலான ஆராய்ச்சி. இப்படி நாம் நமது அணுகுமுறையை எளிமைப்படுத்திக் கொள்வோம். தமிழ் இலக்கிய நீண்ட வரலாற்றில், பக்திப் பாடல்களில், மிக விரிந்த அளவில், மிகவும் வித்தியாசமான பரப்பில், புதிய புதிய

உத்தி முறைகளை மேற்கொண்டவர் இராமலிங்க சுவாமிகளே என்பது ஓர் அரிய, கவனத்துக்குரிய செய்தியாகும்; அவர்களது உத்திமுறைகள் மிக மென்மையானவை ; மிக மேன்மையானவை ; மென்மைக்கும், மேன்மைக்கும் ஆயிரக்கணக்கான உதாரணப் பாடல்கள் இருக்கின்றன ; எல்லாருக்கும் மிகவும் பரிச்சயமான இரண்டே இரண்டு பாடல்களை இங்கே நினைவு படுத்திக் கொள்வது பொருத்தமாகும். "வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்..." என்ற பாடலும் "கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த.." என்ற பாடலும் நினைவுபடுத்தி நெஞ்சத்தில் நிறுத்திக் கொள்ள வேண்டிய மென்மைப் பாடல்கள் ; மேன்மைப் பாடல்கள்....

இந்தச் சிறிய ஆய்வுக் கட்டுரையில், நாம் பார்க்க இருப்பது, நான்காம் திருமுறையில் அமைந்துள்ள, "அருட்பிரகாச மாலை" என்னும் பகுதியாகும். இப்பகுதியில், இராமலிங்க சுவாமிகள் 100 - பாடல்கள் பாடி அருளியுள்ளார்கள். "எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்" என்பது யாப்புக் குறிப்பு. இந்த நூறு பாடல்களிலும் சொல்லப்பட்டிருக்கும் அடிநாதமான, ஒரே ஒரு பொருள், "இறைவன் நான் இருக்கும் இடம் தேடி வந்தான் ; வந்து என்னை அழைத்தான், அழைத்து, என் கையில் ஒரு பொருள் கொடுத்துச் சென்றான்" என்பது மட்டுமே ஆகும். வேறு ஒரு வகையில் சொல்வதென்றால் "ஒரு பொருள் மேவிய நூறு பாட்டு" என்று சொல்லி நினைவில் வைத்துக் கொள்ளலாம்.

அருட்பா முழுவதிலும் இடம்பெறும் பாத்திரங்கள் இரண்டே இரண்டுதான் ; ஒன்று இறைவன் ; இன்னொன்று இறைவனைப் பாடிப்பரவும் இராமலிங்க சுவாமிகள் ; இதே போன்ற "இரண்டு பாத்திர அமைப்பு"த் தான் திருவாசகத்திலும் அமைந்துள்ளது என்பதை ஓர் உதாரணச் சுவையாக இங்கே நினைவூட்டிக் கொள்ளலாம் ; இன்னொரு உதாரணச் சுவையாக மகாகவி ரவீந்திரநாத் தாகூரின் கீதாஞ்சலிப் பாடல்களையும் இங்கே நினைவூட்டிக் கொள்ளலாம். கீதாஞ்சலி முழுவதும் தாகூருக்கும் இறைவனுக்கும் இடையிலான உரையாடல்தான். நான்காம் திருமுறையின் "அருட்பிரகாச மாலை" நூறு பாடல்களும் இறைவன் - இராமலிங்க சுவாமிகள் ஆகிய

இருபாத்திரங்களின் உறவும் உரையாடல்களும் தான். நூறு பாடல்களிலும் அமைந்துள்ள நிகழ்வு மிகவும் எளியது. "இறைவன் வருகிறான் ; இராமலிங்கரைச் சந்திக்கிறான் ; அதாவது இருவரின் சந்திப்பு நிகழ்கிறது ; சந்திப்பின்போது இறைவன் இராமலிங்கரின் கைகளில் ஏதோ ஒரு பொருளைத் தருகிறான் ; இராமலிங்கரும் பெற்றுக் கொள்கிறார் ; இறைவன் சென்று விடுகிறான். இவ்வாறு கொடுத்தும் கொண்டுமாக அமைகிற 'அருட்பிரகாச மாலை' நூறு பாடல்களில் எந்த ஓர் இடத்திலும் 'கொடுத்த பொருள் என்ன? ' என்று வெளிப்படையாகச் சொல்லப்படவில்லை. கொடுத்தவரும் சொல்லவில்லை ; கொண்டவரும் சொல்லவில்லை. அருட்பா ஆறு திருமுறைகள் முழுவதிலும் இவ்வாறு சொல்லப்படாத இடங்கள் வேறு எவையேனும் இருக்கின்றனவா? இருக்கலாம் ; இல்லாமலும் இருக்கலாம். ஆனால் ஒரு முரண் சுவையாக 'பிரசாதமாலை' என்னும் பகுதியை இங்கு சிறிது பார்க்கலாம். நான்காம் திருமுறையின் 'பிரசாதமாலை'யில் பத்துப்பாடல்கள் இருக்கின்றன ; இறைவன் இராமலிங்க சுவாமிகளுக்குத் திருநீறும் பூவும் அளிக்கிறான் ; இராமலிங்கரும் பெற்றுக்கொள்கிறார். "மலர்ந்த முகம் காட்டி நின்று, திருநீற்றுப்பையை, மலர்க்கரத்தால் அவிழ்த்து, அங்கு வதிந்தவர்கட்கெல்லாம் அலர்ந்த திருநீறு அளித்து, பின்னர் என் கரத்தில், அருண் மலர்ப்பூ அளித்தனை என்றும், "திருநீற்றுத் தனிப்பை அவிழ்த்து எனக்குத் தகுசுடர்ப்பூ அளிக்கவும், நான் வாங்கி, களித்து, மின்வடிவப் பெருந்தகையே, திருநீறும் தருதல் வேண்டுமென, முன்னர் அது விரும்பி அளித்தனர்" - என்றும், அமையும் பிரசாத மாலைப் பாடல் வரிகள், பெற்றவை எவை என்ற செய்தியைச் சொல்கின்றன ; இவ்வாறு கொடுத்தது என்ன? கொண்டது என்ன ? என்று வெளிப்படையாகச் சொல்லியிருக்கும் அருட்பாக்கள் நிரம்பவே உண்டு. ஆனால், "அருட்பிரகாச மாலை" நூறு பாடல்களில் "கொடுத்தது என்ன? கொண்டது என்ன?" என்பது வெளிப்படையாகச் சொல்லப்படவில்லை. இரண்டே இரண்டு பாத்திரங்கள் இடம்பெறும் ஓரங்க நாடகம் போன்ற இப்பகுதியில் இரண்டு பேருமே வெளிப்படையாகச் சொல்லிக்கொள்ளாமல் மறைத்து மறைத்துப் பேசிக் கொள்ளும் பாங்குதான் ரசனைதான் ஓர் அழகிய கவிதை உத்தியாக அமைந்து சுவை தருகிறது.

இருவருமே வெளிப்படையாய்ச் சொல்லாமல் மறைத்து மறைத்துப் பேசுகின்றனர் என்னும் கவிதைச்சுவை ஒருபுறம் இருக்க, நூறுபாடல்களின் அமைப்பு முறை ஒரு நாடக பாணியில் அமைந்து மேலும் மேலும் சுவை தருகின்றன என்பது முக்கியமான அம்சம் ஆகும். ஒவ்வொரு பாடலையும் தனித்தனி ஓரங்க நாடகமாகவே ரசிக்கலாம்; அல்லது நூறு பாடல்களையும் நூறு காட்சிகள் கொண்ட ஓரங்க நாடகமாகவும் ரசிக்கலாம்; இறைவன் - இராமலிங்க சுவாமிகள் என்ற இரண்டே பாத்திரங்கள் ; இறைவன் வருகிறான், வழங்குகிறான், சென்று விடுகிறான் ; இராமலிங்க சுவாமிகள் வாங்கிக் கொள்கிறார் ; காட்சி முடிகிறது. இருவரின் ஏகாந்த நிலைச் சந்திப்பு, காட்சியின் பின்னணி வருணனை, பேச்சு உரையாடல், கொடுக்கல் - வாங்கல் வருணணை, பிரதானப் பாத்திரமான இறைவன் மறைந்து விடுதலான 'சஸ்பென்ஸ்' என்று இந்த ஓரங்க நாடகம் எந்தத் தொய்வும் திகட்டலும் இல்லாமல் 'விறுவிறு' என்று நடந்து முடிகிறது ; காட்சி அமைப்பில், அதன் அழகில் ஈடுபட்டுப் படித்துக் கொண்டே வரும் நமக்கு இறுதியில், "அடடா, என்ன கொடுத்தான், என்ன வாங்கினார்?" என்று தெரியவில்லையே என்று வியப்புத்தான் மிஞ்சுகிறது !

'நூறு நாள் வேலை' என்று இப்போது பரவலாகப் பேசப்படுவது மாதிரி, 'அருட்பிரகாசமாலை'யில் நூறு நாள் - நூறு சந்திப்பு தொடங்குகிறது. நூறுபாடல்களும் "ஒருபோக்கு - ஒருபொருள்" என்னும் அம்சம் பொருந்தியவை என்பதால் ஏதேனும் ஒரு பாடலை முழுவதுமாய் இங்கே பார்த்துவிடுவது நல்லது. தொடர்ந்து வேறுபிற பாடல்களில் முக்கியமான தொடர்களை மட்டும் பார்த்துச் செல்லலாம்.

*"ஒருநாள், அன்று இரவில், அடிவருந்த நடந்து, அடியேன்*
*உற்ற இடந்தனைத் தேடிக் கதவு திறப்பித்து,*
*மருநாள் மலரடிஒன்று உள்ளகத்தே பெயர்த்து,*
*வைத்து, மகிழ்ந்து எனை அழைத்து, "வாங்கு இதனை "என்று*
*தருநாளில், யான்மறுப்ப, மறித்தும் வலிந்து எனது*
*தடங்கைதனில் கொடுத்து இங்கே சார்க என உரைத்தாய்,*

*வருநாளில் அதன் அருமை அறிந்து மகிழ்கின்றேன்*
*மணிமன்றுள் நடம்புரியும் மாணிக்க மணியே ”*

(அருட்பிரகாச மாலை, பாடல் – 7)

நூறு பாடல்களையும் ஒரே ஓட்டத்தில், அல்லது நிறுத்தி, நிறுத்தி வாசித்துவிடலாம் ; ஆனால் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதுதான் சற்றுக் கடினம். பொம்மைக் கடைக்குள் நுழைந்த குழந்தையின் பாடுதான் நம்பாடு ; குழந்தையால் ஒரே ஒரு பொம்மையைத் தேர்வு செய்ய முடியாது ; பொம்மைகளின் பல வண்ணங்கள் ; பல்வகைத் தோற்றங்கள் ; பல்வகை அழகுகள் ; குழந்தை திண்டாடிப்போகும் ; ஏதாவது ஒன்றை எடுத்துத்தான் ஆக வேண்டும் ; அப்படி எடுத்து, வாங்கி வரும் குழந்தை, வீட்டுக்கு வரும் வரைக்கும், வந்த பிறகும் தன் அம்மாவிடம், “அந்த பொம்மை நன்றாய் இருந்தது, ... இந்த பொம்மை நன்றாய் இருந்தது...” என்று சொல்லிக்கொண்டே இருக்கும். கல்லூரி ஆண்டு மலரில் ஒரு பக்கத்தில் அருட்பா ஒரு பாடலை அழகாக அச்சிட வேண்டும் என்பதற்காக சன்மார்க்க சீலர் பேராசிரியர் சுப. அண்ணாமலை அவர்கள் ஆறாம் திருமுறையை நீண்ட நேரம் புரட்டிக் கொண்டிருந்தபோது, மாணவர்களாகிய எங்களிடம் சொன்ன உவமை இந்தக் குழந்தை உவமை ; மறக்க முடியாத உவமை ; அருட்பிரகாச மாலை நூறு பாடல்களுக்குள் ஒரு பாடலைத் தேர்வு செய்வது அப்படித்தான் ஆயிற்று ; அருட்பிரகாச மாலையைப் படிக்கும்போது நீங்களும் ஒரு குழந்தைபோல ஆகி, உங்களுக்குப் பிடித்தமான வேறு ஒரு பாடலைத் தேர்வு செய்து கொள்ளலாம்.

மேலே காட்டியுள்ள அருட்பிரகாசமாலை ஏழாம் பாடலுக்கு உரை வேண்டியதில்லை ; ஆனால் இறைவனின் வருகை, அவனது அன்பு, வழங்கிய ஒரு பொருள், வள்ளலார் வாங்கிய முறை ஆகிய நிகழ்வுகளை, பொருள் புலப்பாட்டுத் தேவை கருதி, ஒரு முறை எண்ணிப்பார்க்கிறோம் ; வள்ளலாரின் தேனொழுகு நடைபற்றி எண்ணிப்பார்க்கிறோம் :

கொடுப்பது ஒரு ரகசியமான பொருள் அல்லவா ! அதனால் பகல் நீங்கிய ஒருநாள் இரவில் வருகிறான் ; இராமலிங்கருக்கு எப்படியாவது ஒரு பொருள் வழங்கிவிட வேண்டும் என்று கருதி விரைவாக நடந்தனன் போலும். அதனால் ‘வருந்த நடந்து’ என்கிறார் ; இராமலிங்கர் இருக்கும் இடம் இறைவனுக்குத் தெரியாதா? தேடித்தான் காண வேண்டுமா ? “இடந்தனைத் தேடி” என்பதற்கு இறைவனது நடையில் காணப்படும் ஒருவிதப் பரபரப்பு ஒருவித ஆர்வம் எனக் கொள்ள வேண்டும். கதவின் அருகே வந்தாயிற்று ; உள்ளே இராமலிங்கர் இருக்கின்றார் ; இறைவன் வருவான் என்று தெரியாது ; எனவே இறைவன்தான் கதவைத்தட்டித் திறக்கச் சொல்ல வேண்டும்; இப்போது கதவு தட்டப்பட்டது ; கதவும் திறந்தது ; மணம் கமழும் மலர் போன்ற திருவடியை உள்ளே வைத்து, இறைவன் வீட்டுக்குள் வந்து விட்டான் ; மகிழ்ச்சியோடு இராமலிங்கரை அழைக்கிறான் ; “இந்தா, பிடி, வாங்கு” என்று உரைத்து ஒரு பொருள் கொடுக்கிறான். இந்த நிகழ்வுகளையெல்லாம் எதிர்பாராத இராமலிங்கர் “வேண்டாம்” என மறுக்கிறார்; ஆனால் இறைவன் விடவில்லை ; மீண்டும் வலியுறுத்தி, இராமலிங்கரின் தடங்கையில் கொடுக்கிறான் ; கொடுத்துவிட்டு, “இங்கே இரு” என்றுரைத்துச் சென்று மறைகிறான்; இவற்றையெல்லாம் இராமலிங்கர் ஒவ்வொரு நாளும் நினைந்து நினைந்து மகிழ்கின்றார். இதுதான் பாடலின் திரண்ட பொருள் ; ஏனைய, பிற தொண்ணூற்று ஒன்பது பாடல்களின் திரண்ட பொருளும் இதுதான்; முன்பு குறிப்பிட்டது போல அனைத்துப் பாடல்களும் “ஒரு பொருள் மேவிய” சொற்சித்திரங்களே.

---

**22.02.2020** இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் அடைக்கலக் காதை பற்றித் திரு. ரெங்க.லெ. வள்ளியப்பன் உரையாற்றினார். அன்று முற்பகல் திருக்குறள் முற்றோதல் நடைபெற்றது.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### திருமுகம் கொடுத்தது

பாணபத்திரன் பாண்டியனது அவைக்களத்திலே பாடுகின்ற உரிமை நீங்கியவனாகித் தினந்தோறும் சோமசுந்தரப் பெருமான் சன்னிதானத்தை அடைந்து முக்காலங்களிலும் பக்திரசம் பொருந்திய தெய்வத் தமிழ்ப் பாடல்களைப் பாடும் நியமத்தை மேற்கொண்டான். பெருமான் திருவடிமுன் பாடுவதைத் தவிர வேறெதுவும் செய்யாத பாணபத்திரன் வறுமையில் ஆழ்ந்து வருந்தினான். பக்தனது ஏழ்மை நிலையைக் கண்ட இறைவன் அன்றாடம் பாண்டியனது பொக்கிஷத்திலிருந்து செல்வத்தைக் கவர்ந்து கொணர்ந்து பாணபத்திரனது முன்பு வைக்கலானார். பொற்காசுகள், மணிகள், நகைகள், பொன் ஆடைகள், சாமரங்களின் பொற்பிடிகள், ஆசனத்தின் பொன் தகடுகள் என்று பலவகைப் பொருள்களைப் பாணபத்திரன் பெற்றுச் செல்வானானான்.

இவ்வாறு நடைபெற்றது இறைவனாகிய கள்வனுக்கும் பக்தனாகிய பாணபத்திரனுக்குந்தான் தெரியும். பத்திரனும் அவற்றையெல்லாம் உருக்கி, உருமாற்றி விற்று வந்த பொருளைக்கொண்டு தன்னை அண்டியவர்கட்கும், யாசகர்களுக்கும் வேண்டியது அளித்து வாழ்ந்து வந்தான். இப்படியாக ஒவ்வொரு நாளும் ஏதேனும் ஒரு செல்வம் அளிந்துவந்த சிவபெருமான் சில நாட்கள் சென்றபின் எதுவும் ஈயாமல் இருந்து விட்டார். பாணபத்திரன் ஒவ்வொரு நாளும் திருக்கோயில் சென்று சோமசுந்தரப் பெருமானை உளமார வணங்கி ஒன்றும் பெறாமல் வெறும் கையோடு திரும்பி வந்து கொண்டிருந்தான். வறுமையால் மிகவும் வாடினான். ஓர் இரவு வருந்திய உள்ளத்தோடு பசியானது எரிக்கத் தூங்கிப்போனான். அப்போது பத்திரன் கனவொன்று கண்டான். சோமசுந்தரக் கடவுள் தோன்றினார். "பாணா! பாண்டியனது பொக்கிஷத்திலிருந்து அவ்வப்போது பல பொருள்களைக் கவர்ந்து அளித்து விட்டோம். பாண்டியனும் என்னுடைய பக்தன், பொக்கிஷத்தை வெறுமை ஆக்குவதும்

நியாயமில்லை. தவிர, இதைப் பாண்டியன் தெரிந்து கொண்டால் விபரீதம் விளையும். களவுபோனது தெரிந்தால் காவலாளிகளுக்குக் கடுமையான தண்டனை கிடைக்கும். ஆதலால், யாம் உன்னிடம் திருமுகம் ஒன்று எழுதிக் கொடுப்போம். அந்தத் திருமுகம் ஒன்று எமது பக்தனான சேரமானுக்கு எழுதப்பட்டிருக்கும். நீ அதனை எடுத்துக் கொண்டு சேர நாட்டுக்குச் செல்லக் கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினார். விழித்தெழுந்த பாணபத்திரன், அருகே ஓலைச் சுருள் ஒன்று இருப்பதைக் கண்டெடுத்தான். ஆடினான்; பாடினான்; மகிழ்ச்சிக் கடலில் திளைத்தான். இறைவன் அருளிய திருமுகப் பாசுரம் இவ்வாறு அமைந்திருந்தது.

*"மதிமலி புரிசை மாடக் கூடற்*
*பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற*
*கன்னம் பயிற்பொழி லால வாயில்*
*மன்னிய சிவனியான் மொழிதரு மாற்றம்*
*பருவக் கொண்மூப் படியெனப் பரவலர்க்*
*குரிமையி னுரிமையி னுதவி யொளி திகழ்*
*குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்*
*செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க*
*பண்பால் யாழ்பயிற் பாண பத்திரன்*
*றன்போ லென்பா லன்பன் றன்பால்*
*காண்பது கருதிப் போந்தனன்*
*மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"*

திருமுகப் பாசுரம் பெற்ற பாணபத்திரன் அதனை வெகு பத்திரமாக ஒரு பட்டாடையிலே சுற்றி வைத்துக் கொண்டு இறைவன் சேவடி வணங்கினான். பின்னர் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானை வணங்கி விடை பெற்றுக் கொண்டு சேரநாட்டை நோக்கி மேற்குத் திசையில் பயணமானான். பலவகையான நிலங்களைக் கடந்து சென்று நல்ல வளம் பொருந்திய மலை நாட்டை அடைந்தான்.

மலைநாட்டின் திலகம் போல விளங்கி நின்றது திரவஞ்சைக்களம் என்ற திருப்பதி. அப்பதியிலே தரும தேவதை வாசம் செய்தாள்.

இலக்குமிதேவி திருநடம் புரிந்தாள். வீரமகள் நன்னடம் செய்தாள். வடமொழியும் தென்மொழியும் சிறந்து விளங்கின. கீர்த்தி பெற்ற அந்த நல்லூரின் திருவீதிகள் ஒன்றிலேயிருந்த தண்ணீர்ப் பந்தலில் சென்று தங்கினான் பாணபத்திரன்.

அப்போது சேர நன்னாட்டைச் சீருடன் ஆண்டு வந்தவன் சேரமான் பெருமாள் எனும் வேந்தனாவான். சிவபெருமான் அன்றிரவு சேரமானது கனவினிலே தோன்றினார். "சேர மன்னா ! யாம் ! மதுரைச் சித்தராவோம். உன்னை அண்டி நல்ல பொருள் பெறுவதற்காக எம்முடைய திருமுகம் பெற்றுக்கொண்டு பாணபத்திரன் என்னும் எம் பக்தனொருவன் வந்துள்ளான். அரிய பொருள் அவனுக்கு அளித்து விரைவாக அனுப்புக" என்று மொழிந்து மறைந்தருளினார்.

வியப்புற்று விழித்தெழுந்த சேரமான் பெருமாள் தாம் கண்ட நற்கனவைத் தமது மந்திரிமார்களிடம் சொன்னார். "உமையம்மை பங்கரான சுந்தரப் பெருமாளிடம் ஸ்ரீமுகம் பெற்றுவந்த பாணபத்திரனைத் தேடிக் கொணர்க" என்று சேவகர்களுக்குக் கட்டளை இட்டார். பல இடங்களிலும் தேடிச் சென்ற ஏவலர்கள் முடிவாகப் பாணபத்திரரைத் தண்ணீர்ப் பந்தலில் கண்டுகொண்டனர். விரைவாகச் சென்று அரசனிடம் செய்தி சொல்லினர். விவரம் தெரிந்த சேரமானும் தனது பரிவாரங்களுடன் புறப்பட்டுச் சென்று பாணபத்திரனைக் கண்டு மகிழ்ந்தார். சிரமேல் கைகூப்பி ஆனந்தத் தாண்டவம் ஆடினார். தனக்கெனச் சொக்கேசர் அருளி விடுத்த திருமுக ஓலையை வாங்கித் தமது கண்களிலே ஒற்றிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். பாசுரத்தைப் பலமுறை படித்துப் படித்துப் புளகாங்கிதம் அடைந்தார். எல்லையற்ற உவகையில் முக்குளித்தார். தெய்வத் திருமுகத்தைப் பொன்னாசனத்திலே வைத்து, யானை மேலேற்றி எடுத்துச் சென்றார். தக்க மரியாதைகளுடன் பாணபத்திரனை உடனழைத்துக் கொண்டு தமது திருமாளிகைக்குப் போனார்.

அரண்மனை சேர்ந்ததும் பாணபத்திரனுக்கும் பதினாறு வகையான உபசாரங்களைச் செய்து மகிழ்வித்தார் சேரவேந்தன்.

சோமசுந்தரப் பெருமான் அருளிய திருமுகப் பாசுரத்திலே, "மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே" என்ற கட்டளையை நன்கு உணர்ந்து கொண்டவராகையால் காலந்தாழ்த்த விரும்பவில்லை சேரமான். தம்முடைய பொக்கிஷத்திற்குக் கூட்டிச் சென்று "சிவநேசச் செல்வரே, இங்குள்ள ஐசுவரியங்கள் எல்லாவற்றையுமே நீர் கொண்டு செல்லலாம்" என்று வேண்டினான். "தாங்கள் தருவதே போதும்" என்று பணிவுடன் மொழிந்தான், பாணபத்திரன். எல்லாச்செல்வமும் அவன் அருளியது எனக்கருதிய சேரமானும் ஏராளமான செல்வத்தை வாரிக் கொடுத்தார். ஆனால், பாணபத்திரன் தனக்கு வேண்டிய அளவு பொன்னணிகள், காசுகள், ஆடைகள், சிவிகை, யானை, குதிரை முதலியவற்றை ஏற்றுக்கொண்டு புறப்பட்டான். சேரமான் பெருமாளும் நெடுந்தொலை சென்று பத்திரனை வழியனுப்பித் திரும்பினார்.

வறுமையில் வாடிய கலைஞனாகச் சேரநாடு சென்ற பாணபத்திரன் குபேரனை நிகர்த்து மதுரைமாநகருக்குத் திரும்பினான். ஊர் சேர்ந்ததும் முதல் காரியமாகச் சோமசுந்தரப் பெருமானைத் தரிசித்து வணங்கினான். பின்னர், மதுரை மாந்தர் யாவரும் அறியுமாறு வேதியர், விற்பன்னர், வறியோர் முதலான எல்லார்க்கும் தானதருமம் வழங்கி இனிதே வாழ்ந்திருந்தான்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**